ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2037
மாசி - பிப்ரவரி 2007

# மக்கள் சிந்தனை




சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

முத்தமிழ்ப் பேரவை

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்



திருச்சிராப்பள்ளி, சமயபுரம் அருள்மிகு மாரியம்மன் திருக்கோவில் அறங்காவலர் குழுத்தலைவராக தமிழக அரசால் நியமிக்கப்பெற்ற தொழிலதிபர். தமிழவேள் வீகேயென் கண்ணப்பன் அவர்களை சிறப்பாசிரியர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் 9.2.2007இல் சமயபுரத்தில் பாராட்டி பொன்னாடை அணிவித்து வாழ்த்தினார்கள்.

அறங்காவலர் குழுத்தலைவரான தமிழவேள் வீகேயென் அவர்களின் பணி சிறக்க மக்கள் சிந்தனை வாழ்த்துகிறது.

(ஆ-ர்)

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (விய) மாதம் : தை

மலர் : 11 இதழ் : (1) 2




# இன்றே போல்க, நின் கேண்மை!

முத்தமிழறிஞர் மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் சனவரித் திங்கள் 24ஆம் நாள் சென்னை முத்தமிழ்ப் பேரவை சார்பில் நமக்கு "இயல்செல்வம்" விருது வழங்கிக் கனிந்தும், கலந்தும், கரைந்தும், மகிழ்ந்தும், நெகிழ்ந்தும் போற்றிப் பாராட்டினார்கள்!

நமது திருமடத்தின் சமூக மேம்பாட்டுப் பணிகளை, தமிழ்மொழி வளர்ச்சிப் பணிகளை, நமது நெஞ்சங்களில் நிறைந்திருக்கும் அருள்நெறித்தந்தை தமிழ்மாமுனிவர் அடிகள் பெருமானின் நினைவுகளை, தலைமுறைகள் தாண்டியும் வாழையடி வாழை எனத் தொடர்ந்து கொண்டிருக்கும் அன்பின் ஆழத்தை, நட்பின் அடையாளத்தை உணர்ந்தும், நெகிழ்ந்தும், மகிழ்ந்தும் போற்றினார்கள்.

தொடக்க காலங்களில் அருள்நெறித்தந்தை தமிழ்மாமுனிவர் தவத்திரு அடிகள் பெருமானோடு ஏற்பட்டிருந்த வேறுபாட்டையும் பின்னாளில் தளங்களும், களங்களும் பாதைகளும் மாறுபட்டாலும், பணிகளின் நோக்கும், லட்சியமும் மனிதகுல மேம்பாடுதான் என்ற நிலையில் ஏற்பட்ட நட்பையும், நல்லுறவையும் அன்பின் ஆழத்தையும், நெகிழ்வாய், உணர்வாய்க் குறிப்பிட்டார்கள்.

முடை நாற்றம் வீசுகின்ற மூட நம்பிக்கைகளை எதிர்க்கின்ற போரில் தந்தை பெரியார் ஒருபுறத்தில் தலைமை தாங்கினார்கள்! அதே

போராட்டம், சமய உலகத்தினை சீரமைக்கின்ற பணிகள் ஆன்மிகத்தின் சரியான தடத்தில் மக்களை அழைத்துச் செல்கின்ற பணிகள் அமைதியாய் காலம் காலமாய் சமய உலகத்தில் நிகழ்ந்திருக்கின்றன!

*சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்*
*கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்!*

என்று எழுந்து கிளர்ந்து கேட்டார் அப்பர் பெருமான்.

வைகுண்டத்தின் கதவுகளைத் திறந்துவிட்டு "வாருங்கள்! வாருங்கள்!" என எல்லா மக்களையும் அறைகூவி அழைத்தார் எம்பெருமான் ராமானுஜர்! வாடிய பயிரைக் கண்டபொழுது எல்லாம் வாடினார் வள்ளற் பெருமான்! பசுக்களின் வதையைப் பற்றிக் கவலைப்பட்டவர்களைப் பார்த்து "நீங்கள் மனிதர்கள் வதைபடுவதைப் பற்றி இன்னும் கவலைப்படவில்லையே!" என்று மனித மனங்களின் மனச்சாட்சிகளை பிடித்து உலுக்கினார் சுவாமி விவேகானந்தர்.

அப்பர் பெருமானும், ராமானுஜரும், வள்ளலாரும், சுவாமி விவேகானந்தரும் காட்டிய ஆன்மிகத் தடத்தினை நம் அடிகள் பெருமான் உயர்த்திப் பிடித்துக்கொண்டிருந்த நேரத்தில்தான் முடை நாற்றம் வீசுகின்ற, மூடநம்பிக்கையை எதிர்க்கின்ற போரில் தந்தை பெரியாரும் உச்சக் கட்டத்தில் போராடிக் கொண்டிருந்தார். இரு துருவ நட்சத்திரங்களாய் பணியாற்றிக்கொண்டிருந்த தந்தை பெரியாரும், மகாசன்னிதானமும் சந்தித்துக் கொண்டார்கள்! சிந்தனைப் பரிமாற்றங்கள் நிகழ்ந்தன!

"எனக்கு கடவுள் மீது கோபம் இல்லை! கடவுளின் பெயரால் நடக்கின்ற கயமைத்தனங்களின் மீது தான் கோபம்" என்றார் தந்தை பெரியார். அதே வழியில், "சாதிமத பேதமற்ற சமத்துவ சமூக அமைப்பை சமயத்தின் வழியில் சாதிக்கமுடியும் என்றால் எங்களுக்குக் கருத்து வேறுபாடு இல்லை" என்று "ஒன்றே குலம்! ஒருவனே தேவன்" என்பதை அண்ணா அவர்கள் ஏற்றுக்கொண்டார்! "கோயிலே கூடாது என்பது அல்ல, எங்கள் நோக்கம்! கோயில் கொடியவர்களின் கூடாரம் ஆகிவிடக்கூடாது என்பதுதான்" என்றார் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள்.

ஆன்மிகமும், பகுத்தறிவும், வேறுபட்ட தளங்களில், களங்களில் கடமைகள், பணிகள் ஆற்றினாலும், மனிதகுல மேம்பாடு என்ற உயரிய இலட்சியத்தில் இணைந்து பணிசெய்ய வேண்டிய கனிந்த காலத்தில்தான் கருத்து மாறுபாடு இல்லாது எல்லாச் சமயத்தலைவர்களும் சந்தித்து பாராட்டுகின்ற மகத்தான தலைவராக முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் விளங்கிக்கொண்டிருக்கின்றார்கள்.

சென்னை முத்தமிழ்ப்பேரவை விழாவில் ஊனும், உயிரும் கலந்த உணர்வோடும் உள்ளன்போடும் முத்தமிழறிஞர், மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர் அவர்கள் உதிர்த்த வார்த்தைகள் எழுதிக்காட்ட இயலாத அன்பை வெளிப்படுத்துபவை!

"அடிகளாரைப் போன்றோர் என்னை வாழ்த்துவதும், பணியாற்றுவதும் என்னைப் பலகாலம் வாழவைக்கும்" என்று உள்ளார்ந்த அன்போடும், உயர்ந்த இலட்சிய நோக்கோடும், நம்பிக்கையோடும் முத்தமிழறிஞர் மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள் கூறியவற்றை எண்ணி, நினைந்து பாராட்டி அருந்தமிழ் மூதாட்டி அவ்வை வாழ்த்திய அதே வாக்கில், உள்ளார்ந்த அன்பின் உணர்வில் முத்தமிழறிஞர் கலைஞரை வாழ்த்துவோம்!

*"நீலமணி மிடற்று ஒருவன் போல*
*மன்னுக பெரும நீயே!"*

நமது அடிகள் பெருமான் முத்தமிழறிஞர் கலைஞருக்கு ஆழ்ந்த அன்புணர்வோடு எழுதிய கவிதை ஒன்றைத் தம் இதயத்துக் கல்வெட்டாய் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் இன்றும் போற்றி வருகின்றார்கள்.

*பற்றற்ற அடிகள் பெருமான்*
*கனிந்த தமிழ்க் கவிதையாய்*
*விடுத்த வேண்டுகோள்*
***"இன்றே போல்க நின் கேண்மை"***

என்பது.

இதையே நாமும், முத்தமிழறிஞர் கலைஞரிடம் வழிமொழிந்து வேண்டுகின்றோம்!

பொன்னம்பல அடிகள்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 72. அவையறிதல்

சான்றோர்கள் பலர் கூடியிருக்கின்ற அவையின் தன்மையினை அறிந்து பேசுதல்.

*அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்*
*தொகைஅறிந்த தூய்மை யவர்.* (711)

சொற்களின் வகைதொகையினை அறிந்த தூய்மையினை உடையார், அவையின் தன்மையை ஆராய்ந்தறிந்து சொல்லுக .

சொற்களின் வகைதொகை-ஒரே சொல் பலபொருள் உடையதாக அமையும். அதனால் சொல்லின் தொகையறிந்து சொல்லுக என்றார்.

*இடைதெரிந்து நன்குஉணர்ந்து சொல்லுக சொல்லின்*
*நடைதெரிந்த நன்மை யவர்.* (712)

சொல்பவருக்கும், கேட்பவருக்கும் உள்ள இடைவெளியை நன்குணர்ந்து சொல்லுக, சொற்களின் நடையறிந்து நன்மை பயக்கச் சொல்லும் இயல்பினர்.

சொல்பவருக்கும், சொல்லப்படுபவருக்கும் இடைவெளி குறைவாக இருந்தால் இருவருக்கும் உள்ள இடைவெளியைக் குறைக்கக்கூடிய சொற்களாகத் தெரிந்து சொல்ல வேண்டும் என்பது கருத்து.

சொல்பவருக்கும் கேட்பவருக்கும் உள்ள இடைவெளி, உணரும் திறன்,நோக்கங்கள் ஆகியவற்றின் காரணமாக உருவாவது.

*அவைஅறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்*
*வகைஅறியார் வல்லதூஉம் இல்.* (713)

அவையறியாது சொல்லுபவர்கள், சொல்லின் வகையறியாதவர்கள். மேலும் பல கலைத் துறைகளிலும் அனுபவம் இல்லாதவர்கள்.

"சொல்ல வல்லார்" இலராக இருந்தாலும் உளவியல், நட்பியல் போன்றவை அறிந்திருந்தால் குறையை ஈடுசெய்து கொள்ள இயலும் என்பது கருத்து.

*ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்*
*வான்சுதை வண்ணம் கொளல்.* (714)

ஒள்ளிய அறிவினையுடையாரின் அவையினைச் சார்ந்த ஒருவர் ஒள்ளிய அறிவினராதல் கூடும். அதுபோலவே புல்லறிவாண்மையுடையாரின் அவையைச் சார்ந்த ஒருவர் புல்லறிவாண்மையுடையராதலே இயலும்.

"இமயம் சார்ந்த காக்கை பொன்னிறமாதல்" போல, ஒள்ளிய அறிவுடையாரின் அவை சேர்ந்தால் ஒள்ளிய அறிவுடையராகலாம். புல்லறிவாண்மையுடையாரின் அவை சேர்ந்தால் புல்லறிவாண்மையுடையராதலே கூடும். "சார்ந்ததன் வண்ணமே ஆதல் உயிரியற்கை" என்ற வாய்பாடு அறிக.

ஒள்ளிய அறிவுடையோரவையில் புல்லறிவாண்மையுடையோர் பிதற்றினாலும் அறிவுடையோர் பெருந்தகைமையால் பொறுத்தாற்றி அறிவு கொளுத்துவர். புல்லறிவாளரோ தம்மைச் சார்ந்தவர் பெற்றுள்ள அறிவையும் பழிப்பர். ஆதலால் புல்லறிவாளர்களிடம் அறிவுடையோராகக் காட்டாதிருத்தலே நன்று என்ற கருத்தும் ஏற்புடையதே.

*நன்றுஎன் றவற்றுள்ளும் நன்றே முதுவருள்*
*முந்து கிளவாச் செறிவு* (715)

நன்று என்று பட்டியலிடப் பெற்றவற்றுளெல்லாம் நன்று, மூதறிஞர்கள் அவையில் அவர்தம் குறிப்புக் கிடைக்காமல் முந்தி ஒன்றைச் சொல்லாதிருக்கும் அடக்கம்.

"முந்து கிளவாச் செறிவு"- என்றதால் மூதறிஞர்கள் கேட்டால் சொல்லலாம் என்றுணர்த்தியவாறு.

அடக்கம் அறியாமையின் பாற்பட்டதல்ல என்பதனை உணர்த்தச் "செறிவு" என்றார்.

*ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்*
*ஏற்றுஉணர்வார் முன்னர் இழுக்கு.* (716)

நன்னெறியில் நின்றொழுகுவார் நிலை தடுமாறியது போன்றதே மெய்ப்பொருள் கற்றுணர்ந்தார் முன் கற்றதை முறையாகச் சொல்லும் திறனின்றி இழுக்குப்படுதல்.

நன்னெறியில் நின்றமையப்பெற்ற பெருநெறிகள், ஒரு அடி தவறுதலால் பயனற்றுப் போதல்போல் கற்றுணர்ந்தார் அவையில் சொல்லமாட்டாதார் கல்வி அறிவு இழுக்குப்படும்.

*கற்றுஅறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்*
*சொல்தெரிதல் வல்லார் அகத்து.* (717)

குற்றமறச் சொற்பொருள் ஆராய்ந்தறிவார் அவையில் கற்றறிந்த கல்வியினாலாய சிறப்பு விளங்கித் தோன்றும்.

கற்றறிந்தார் அவையிலேயே கல்வியறிவு அறியப் பெறும். விளக்கமும் அறியப்பெறும். அதனால் கல்வியறிவில்லாத அவையில் அறிவு விலை போகாது என்பது தேற்றம்.

*உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்*
*பாத்தியுள் நீர்சொரிந் தற்று* (718)

கல்வியறிவின் அருமையை உணர்வார்முன் சொல்லுதல் வளரும் பாத்தியில் தண்ணீர் ஊற்றியதைப் போன்றது.

வளரும் பயிருக்கு நீர் துணை செய்தல் போல அறிவில் வளர்வோர்க்குக் கற்றறிந்தார் அவை தரும் பாராட்டு, துணை செய்யும்.

*புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்*
*நன்கு செலச்சொல்லு வார்.* (719)

கற்றறிந்த அவையில் நல்லவண்ணம் நற்பொருளைச் சொல்லும் இயல்பினை யுடையவர்கள் ஒற்றறியாப் புல்லர்கள் அவையில் மறந்தும் நற்பொருளைக் கூறுதல் வேண்டாம்.

புல்லர் அவையில் நல்லன கூறுதல் பன்றியின் முன்னே முத்துக்களைப் பரப்பியதைப்போலப் பயனற்றுப் போகும்.

*அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தம்கணத்தர்*
*அல்லார்முன் கோட்டி கொளல்.* (720)

கொள்கையால், கோட்பாட்டால் தம்மினமல்லாதார்முன் விவாதம் செய்தல் முற்றத்தில் அமிர்தத்தினைக் கொட்டியதை ஒக்கும்.

*(தொடரும்)*

சமுதாய இணக்கம் ஏற்பட்டால்தான் மனிதகுலத்தின் பொது எதிரிகளாகவுள்ள அறியாமை, வறுமை, ஏழ்மை, வேறுபாடுகள், பகைமை, போர் இவைகளை எதிர்த்துப் போராட முடியும்.

**- அருள்நெறித்தந்தை**

# சிறப்பாசிரியர் அவர்களுக்கு "இயல் செல்வம்" விருது தந்து தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் ஆற்றிய பாராட்டுரை

"இந்த விழாவில் நான் நீண்ட நாளாக நிறைவேறாமல் இருந்த ஒரு நிகழ்ச்சி இன்றைக்கு நிறைவேறியிருக்கின்றது. அதுதான் நம்முடைய தவத்திரு பொன்னம்பல அடிகளாருக்கு "இயல் செல்வம்" விருது வழங்கப்பட்டிருப்பதாகும். அவர் இந்த மேடையில் விருது பெற்று உரை நிகழ்த்துகின்ற நேரத்தில் நான் எண்ணிக் கொண்டேன். என்னுடைய வயது உங்களுக்குத் தெரியும். என்னுடைய அரசியல் வாழ்வு எப்போது தொடங்கியது என்பதும் உங்களுக்குத் தெரியும். என்னுடைய இலக்கிய நுழைவு எப்போது என்பதும் உங்களுக்குத் தெரியும். எனவே இத்தனை ஆண்டுகாலம் வாழ்ந்து கொண்டிருக்கின்ற காரணத்தால், எனக்குத் தனிப்பெருமை, தலைமுறைகளைச் சந்திக்கின்ற, தலைமுறைகளை வாழ்த்துகின்ற, தலைமுறைகளால் பாராட்டப்படுகின்ற அந்தப் பேற்றினை நான் பெற்றிருக்கின்றேன். அந்தப் பேறுகளிலே ஒன்றுதான் நம்முடைய குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் இங்கே என்னைப் பாராட்டியதாகும்.

தமிழகத்திலே ஆன்மீகத்திற்கு ஒரு புதுப் பொலிவை, ஒரு தனிவலிவை, ஒரு தனி கீர்த்தியை உருவாக்கிக் காட்டியவர் பெரிய குன்றக்குடி அடிகளார் அவர்களாகும். அவரும் நானும் சந்தித்த நிகழ்ச்சியே ஒரு விசித்திரமான வேடிக்கையான நிகழ்ச்சி. திராவிட இயக்கத்தினுடைய தாக்கம் வெகு வேகமாக தமிழகத்தில் பரவிக் கொண்டிருந்த காலத்தில், பெரியாரும், அண்ணாவும், புரட்சிகரமான கொள்கைகளை மக்கள் மத்தியிலே எடுத்து வைத்த அந்தக் காலத்தில் எங்களைச் சுற்றிலும் நான்கு பக்கமும் வேடர்சூழ நடுவிலே சிக்கியமான் போல என்பாரே பாரதிதாசன், அதுபோல நாங்கள் எதிர்ப்புகளுக்கு ஆளாகிய நேரத்தில், நம்முடைய பொள்ளாச்சி மகாலிங்கம் போன்றவர்கள் எல்லாம், எங்களுடைய கருத்துக்களை ஏற்காமல் எதிர்த்துக் கொண்டிருந்த அந்தக் காலக்கட்டத்தில், குன்றக்குடி அடிகளாரும் எங்களுடைய சமுதாயக் கருத்துக்களை விமர்சிக்கின்ற மேடைகளிலே தோன்றினார் என்பதும், அவரை எப்படிச் சந்திப்பது என்பதைப்பற்றி நாங்கள் சிந்தித்தோம் என்பதும் பழைய வரலாறு.

ஒரு நாள் நான் மயிலாடுதுறையில் பயணியர் தங்கும் விடுதியில் தங்கியிருக்கிறேன். பக்கத்து அறையில் குன்றக்குடி அடிகளார் பெரியவர் தங்கியிருக்கிறார். இதிலே எங்களுக்குள் யார் யாரைப்போய்ச் சந்திப்பது

என்ற ஒரு ஐயப்பாடு. நான் போய்ச் சந்திப்பதாகச் சொன்னால் ஒரு வேளை ஏற்றுக்கொள்வாரோ இல்லையோ, சம்மதிப்பாரோ இல்லையோ என்று நான் என்னுடைய அறையில் இருக்கிறேன். நண்பர் கருணானந்தம் அவர்கள் தந்தை பெரியாரிடத்தில் மாணவர்களாக இருந்தவர்களில் ஒருவர். அவர் செய்த ஏற்பாட்டின்படி நானும், குன்றக்குடி அடிகளார் அவர்களும் அந்த விடுதியில் சந்தித்து அரை மணி நேரத்திற்கு மேலாகப் பேசிக்கொண்டிருந்தோம். ஒருவரையொருவர் சந்தித்த பிறகுதான் திராவிட இயக்கக் கொள்கைகளுக்கும், பெரியாரின் கொள்கைகளுக்கும், அண்ணாவின் இலட்சியங்களுக்கும் அடிகளார் மக்களிடம் சென்று சொல்கின்ற தத்துவங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை நானும் உணர்ந்து கொள்ள முடிந்தது, அவரும் உணர்ந்து கொள்ள முடிந்தது. நாங்கள் இருவரும் ஒன்றாக முடிந்தது. அதுதான் மயிலாடுதுறையில் உள்ள அந்தப் பயணியர் விடுதி எனக்குத் தந்த பேறு.

அவரிடம் நான் கொண்ட அன்பு, அவர் என்னிடம் கொண்ட அன்பு சிறிதும் மாறாமல் பழகி வந்தோம். பல போராட்டங்கள் தமிழகத்திலே நடைபெற்றன. மொழிக்காக நடைபெற்ற ஒரு போராட்டத்தில் அடிகளார் அவர்களும் கலந்துகொண்டு, அதன் காரணமாக எத்தகைய இன்னல்களுக்கெல்லாம் ஆளானார் என்பது அனைவருக்கும் தெரியும்.

அவ்வழியிலேயே இங்கு வந்துள்ள நம்முடைய இளம் அடிகளார் அவர்கள் எப்படி இருப்பாரோ என்று நாங்கள் கருதிய நேரத்தில், அவர் தன்னுடைய வாழ்க்கையின் மூலம் தன்னுடைய கருத்துக்களை எடுத்துத் தருகின்ற செயலின் மூலம் நானும் அப்படித்தான் இருக்கிறேன் என்று தன்னை அடையாளம் காட்டிக் கொண்டிருக்கிறார். இது வழி வழி தமிழை வளர்க்கவும், தமிழர்களுடைய பண்பாடு, கலாச்சாரம், தமிழர்களுடைய மரபு இவைகளை வளர்க்கவும் பயன்படக்கூடிய ஒன்று.

அவர் இங்கே என்னை வாழ்த்தும்போது சொன்னார். நான் நீண்ட காலம் இருந்து நாட்டிற்கு, மொழிக்கு என்னென்ன நன்மைகளை யெல்லாம் செய்ய வேண்டுமென்றார். நீங்கள் எல்லாம் இருந்தால், இன்னும்கூட ஒருபத்து, இருபதாண்டு காலம் ஆயுள் எனக்கு நீண்டு அவைகளை யெல்லாம் செய்யக்கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்படும். இந்த நம்பிக்கை எனக்கு இருக்கின்றது. எத்தனையோபேர் நான் நூறாண்டுகாலம் வாழப் போகிறேன் என்றெல்லாம் சொன்னார்கள். அவர்கள் தங்களை நம்பிச் சொன்னார்கள். நான் உங்களை நம்பிச் சொல்கிறேன். எனவே இதில் எந்தவிதமான தவறும் இருக்க முடியாது.

நன்றி : முரசொலி மதுரைப் பதிப்பு 26.1.2007

# எத்தனை ஆசிரியர்!

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

பள்ளியில்தான் ஆசிரியர் உள்ளார் என்றே
பார்க்காதே, என்தோழா! அதோபார், ஆழி,
துள்ளிவரும் "வெள்ளலை"ஓர் ஆசான்; தோயாச்
சுறுசுறுப்பை அதைப்போல புகட்டு வோர்யார்?
வெள்ளியுடன் விழித்தெழுந்தே விடியல் தன்னை
விளம்புகின்ற "காகம்"ஓர் ஆசான்! நெஞ்சை
அள்ளுகின்ற புன்சிரிப்பின் மாண்பைக் கூறும்
"அழகுமலர்" ஒவ்வொன்றும் ஆசான் என்பேன்!

தன்கடமை தவறாமல் நடக்கும் "ஆ"றோ
தடம்உணர்த்தும் பேராசான் என்பேன்! வீசும்
மென்"தென்றல்" ஓர் ஆசான்; தேடிவந்து
மேனிக்கே மகிழ்வூட்டும் தொண்டைக் கூறும்!
வன்னெஞ்சர் வாளாலே வெட்டி னாலும்
மாளும்வரை நிழல்தந்தே குளிர்ச்சி நல்கும்
நன்"மரம்" ஓர் நல்லாசான்! காட்டுத் "தேனீ"
நமக்கெல்லாம் "சேமிப்"பை உணர்த்தும் ஆசான்!

சீர்வரிசை ஒழுங்குமுறை செப்பும் ஆசான்
"சிற்றெறும்"பைப் போலுண்டா? கழிவு நீரை
வேருக்கே அளித்தாலும் "தென்னை" தானே
விருப்பமுடன் "இனிப்பிளநீர்" கொடுக்கும் ஆசான்!
ஏர்முனையால் சீர்உழவர் வதைத்த போதும்
இதமுடனே உதவும் "மண்புழு"வோர் ஆசான்!
பார்நண்பா! உற்றுப்பார்! உலக மெங்கும்
பல்வேறு ஆசிரியர் உள்ளார் தேடு!

---

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்)

## கல்வெட்டுகள்

முகப்பு முழுத்தூணின் மேற்சதுரத்திலுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டால் மாசிலீச்சுரம் என்றழைக்கப்படும் இந்த நடுக் குடைவரையில், இதையும் சேர்த்து ஒன்பது கல்வெட்டுகளும் சேத்ரபாலருக்காக எடுக்கப்பட்டுள்ள சுவரில் இரண்டு கல்வெட்டுகளும் உள்ளன. இவை தரும் செய்திப் பிழிவுகளைக் கல்வெட்டுகளின் பார்வையில் குன்றக்குடி என்ற தலைப்பின் கீழ்ப் பார்க்கலாம்.

## மூன்றாம் குடைவரை

முதலிரண்டு குடைவரைகளின் நடைமாளிகை வழியே மூன்றாம் குடைவரைக்குச் செல்ல முடியாதபடி அதன் முன் கட்ட !ப்பட்டுள்ள பெருமண்டபச் சுவர் தடுப்பாய் அமைந்துள்ளது. வெளிப் பெருமண்டபத்தினுள் பிதுக்கமாய் நிற்கும் இப்பெருமண்டப வாயில் எப்போதும் பூட்டப்பட்ட நிலையிலேயே உள்ளது. இந்தியத் தொல்லியல் துறையின் பராமரிப்பில் உள்ள குன்றக்குடிக் குடைவரைகளுள் இம்மூன்றாம் குடைவரையிலேயே அதிக அளவில் சிற்பங்கள் இருப்பதால் பாதுகாப்புக் கருதி பூட்டி வைத்துள்ளனர்.

பெருமண்டபத் திருவாயில் மேல் சுதையுருவங்களாகச் சில சிற்பத் தொகுதிகள் வாயிலைத் திறந்து உள்நுழைந்ததும் பதினைந்தாம் நூற்றாண்டுக் கலைமுறையில் அமைத்த நான்கு தூண்கள் தாங்கி நிற்கும் மண்டபத்தின் வரவேற்பு. குடைவரைக் கூரைச் சரிவின் மேல் பாறைப்பாலங்களை நுழைத்து மண்டபமாக இழுத்திருக்கிறார்கள். இம்மண்டபத் திருப்பணி பற்றிப் பேசும் கல்வெட்டு மண்டப வெளிச்சுவரில் காணப்படுகிறது. குடையப் பட்டிருக்கும் கருவறையை நோக்கியவாறு .இம்மண்டப நடுவில் நந்தியொன்று உள்ளது.

மாமல்லபுரத்து அதிரணசண்டேசுவரம் போன்ற முகப்பு, குன்றின் இயற்கையான சரிவு, நீளமான கூரைக்கும் கோட்டம் அமைக்க

வாய்ப்பான பக்கப்பகுதிகளுக்கும் நின்று நோக்க நல்ல அகலமான தரையமைப்பிற்கும் இடம் தந்திருக்கிறது. பக்கப் பகுதிகளின் கீழ்ச் சரிவுகளில் மேற்கில் முருகனும் கிழக்கில் பிள்ளையாரும் செதுக்கப்பட்டுள்ளனர்.

கிழக்கு மேற்காக 5.36 மீ. நீளமும் தென்வடலாக 80 செ. மீ அகலமும் உள்ள முகப்புத் தளத்தின் மேல், பக்கங்களில் அரைத்தூண்களும் இடையில் முழுத்தூண்களுமாய் நான்கு தூண்கள் பொளியப்பட்டுள்ளன. இத்தூண்கள் அமைந்திருக்கும் தளம் முன்தரையைவிட 9 செ.மீ அளவும் முகமண்டபத் தரையைவிட 4 செ.மீ அளவும் உயர்த்திக் கட்டப்பட்டுள்ளது. முன்தரை இத்தளக் கீழ் விளிம்பிலிருந்து 1.08 மீ. அளவிற்குத் தெற்கிலும் 5.30 மீ. அளவு கிழக்கு மேற்காகவும் பரந்துள்ளது.

தளத்தின் மீதுள்ள தூண்கள் முதலிரண்டு குடைவரைகள் போலவே அமைந்துள்ளன.21 இவற்றின் போதிகைகள் சிறிய கீழ்க் கைகளையும் இருமடங்கு பெரிய மேற்கைகளையும் உடையன. விரிகோணத்தில் திரும்பும் மேற்கைகள் மடிப்புடன் உத்திரம் தொடுகின்றன. மேலே வாஜனம். இது, இரண்டாம் குடைவரையைப் போல் முகப்பின் பக்கச் சுவர்களில் இறங்கி ஆங்கமைந்துள்ள கோட்டங்களுக்கு மேல்நிலையாகியுள்ளது.

இக்கோட்டங்களின் வடபுற அணைவாக முகப்பின் பக்க அரைத்துதூண்கள் அமைய, தென்புறத்தே சிறு அளவிலான நான்முக அரைத்தூண்கள் உள்ளன. கோட்டங்களின் அடித்தளங்கள் முன்தரையிலிருந்து மேற்கில் 41 செ.மீ., கிழக்கில்21 செ. மீ. என உயர்த்தி அமைக்கப்பட்டுள்ளன. இக்கோட்டங்களில் பேரளவினராய் வாயிற் காவலர்கள் நிற்கின்றனர்.

வாஜனத்திற்கு மேலிருந்து 1.29 மீ. அளவிற்குத் தெற்கில் சரிந்து இறங்கும் பாறை முன் தரை முழுவதற்கும் கூரைபோல் அமைந்துள்ளது. பாறையின் இயற்கையான இச்சரிவை அதிக வேலைப்பாடுகளுக்கு உட்படுத்தாமல் எளிய கூரையாகப் பயன்படுத்தியிருக்கிறார்கள். இவ்வளவு நீண்ட கூரையை மிகமிக அருமையாகவே குடைவரைகளில் பார்க்கமுடிகிறது. கூரை முகப்பின் மேற்பகுதியில் முழு நீளத்திற்கும் கிழக்கு மேற்காகக் குழிவுண்டாக்கி மழைநீரோட்ட வடிகாளாய்ச் செய்திருக்கிறார்கள்.

## முகமண்டபம்

தெற்கு வடக்காக 1.60 மீ. அளவிலும் கிழக்கு மேற்காக 5.68 மீ. அளவிலும் அமைந்துள்ள முகமண்டபத்தின் கூரை வெறுமையாக உள்ளது. கிழக்கிலும் மேற்கிலும் இக்கூரையை ஒட்டி வாஜனம் காட்டப்பட்டுள்ளது. முகமண்டபச் சுவர்களில் முப்புறத்திலும் கோட்டங்கள் அகழ்ந்து சிற்பங்களைச் சமைத்துள்ளனர்.

மேற்குக் கோட்டத்தை திருமாலும் கருடனும் பகிர்ந்து கொள்ளக் கிழக்குக் கோட்டத்தை ஆடல்தோற்றத்தில் சிவபெருமான் அலங்கரிக்கின்றார். முகமண்டபப் பின்சுவரில் வலப்புறத்தே நீள் எரியாய் நிமிர்ந்தவரும் இடப்புறத்தே கொற்றவையும் சங்கர நாராயணரும் காட்சி தருகின்றனர். இச்சிற்பக் கோட்டங்களின் கீழே தளஅமைப்புக் காணப்படுகிறது. இத்தளம் முகமண்டபத் தரையமைப்பிலிருந்து வெவ்வேறு அளவுகளில் உயர்த்திக் காட்டப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| திருமால் கருடன் தளம் | 43 செ.மீ |
| இலிங்கோத்பவர் தளம் | 55 செ.மீ |
| கொற்றவைத் தளம் | 19 செ.மீ |
| சங்கரநாராயணர் தளம் | 28 செ.மீ |
| சிவபெருமானின் ஆடல் தோற்றத் தளம் | 68 செ.மீ |

## கருவறை

முகமண்டபத்திலிருந்து கருவறையை அடைய நான்கு படிகள் உள்ளன. கீழ்ப்படி அரைநிலா வடிவத்தில் இருக்க, மேற்படி, கருவறை வாயிலின் கீழ்நிலையாக அமைந்துள்ளது. தாங்குதள அமைப்பின்றி 1.88 மீ உயரமும் 1.03 மீ அகலமும் கொண்டமைந்துள்ள கருவறை வாயிலின் இருபுறமும் பக்கத்திற்கொன்றாக நான்முக அரைத்தூண்கள் போதிகைகளின்றிக் காட்டப்பட்டுள்ளன.22

இத்தூண்களின் மேல் அமர்ந்துள்ள உத்திரம் கருவறையின் பக்கங்களில் படிந்து முகமண்டபப் பின்சுவர்க் கூரையையொட்டி முழு நீளத்திற்கும் கிழக்கு மேற்காகத் தொடர்கிறது. அரைத்தூண்களையொட்டி இவ்வுத்திரம் அவற்றின் மேற்பரப்பிலிருந்து சற்று வெளிவாங்கி, அதே அகலத்தில் கருவறை வாயிலின் மேல்நிலையாக அமர்ந்துள்ளது.

கருவறைத் தரையமைப்பு, வாயில் கீழ்நிலையின் அளவில் இருப்பதால் இவ்வாயில் நிலையை அடுத்துப் பிற்காலத்தில் சிறு தடுப்பு அமைத்துள்ளனர். தென்வடலாக 2.95 மீ. நீளமும் கிழக்கு மேற்காக 2.91 மீ. அகலமும் 2.21 மீ. உயரமும் பெற்றுள்ள கருவறையின் கூரையும்

சுவர்களும் வெறுமையாக உள்ளன. கருவறையின் நடுப்பகுதியில் மற்ற இரண்டு குடைவரைகளைப் போலவே தாய்ப்பாறையிலேயே செய்தமைத்த இலிங்கத்திருமேனி அமைந்துள்ளது. 1.08 மீ. பக்க அளவுள்ள சதுர ஆவுடையாரின் மீது 57 செ.மீ. உயரமுள்ள பாணம் காட்சிதருகிறது. இதன் சுற்றளவு 1.18 மீ. கோமுகம் மேற்கு முகமாக உள்ளது.

## சிற்பங்கள்

குடைவரைக்கு முன்னுள்ள பகுதியில் நான்கு சிற்பங்களும் முகமண்டபத்தில் நான்கு சிற்பத் தொகுதிகளும் ஒரு தனிச் சிற்பமும் உள்ளன.

## முகப்புக்கு முன் உள்ள சிற்பங்கள்

முகப்பொட்டிய பாறைச்சரிவுக் கோட்டங்களில் கிழக்கிலொன்றும் மேற்கிலொன்றுமாய் இரண்டு வாயிற்காவலர் வடிவங்கள் காணப்படுகின்றன. இவற்றின் உயரம் இரண்டு மீட்டர். அளவில் பெரிய இவ்வடிவங்கள் மண்டகப்பட்டு, தளவானூர்க் குடைவரைக் காவலர்களை நினைவூட்டுவனவாக அமைந்துள்ளன.

இக்குடைவரையின் இருகாவலருமே நேர்ப் பார்வையினராய்ச் சடைமகுடத்துடன் முப்புரிநூல், உதரபந்தம் அணிந்து வீரப்பெருமிதர்களாய்க் காட்சிதருகின்றனர். மேற்கிலுள்ளவருக்கு இரண்டு சிறிய கோரைப் பற்கள். இவரது இடப்பாதம் நேராகவும் வலப்பாதம் திரயச்ர உத்கட்டிதத்திலும் உள்ளன. வலமுழங்கையை உருள் தடியின் மேல் வைத்து இடக்கையை ஊரு அஸ்தமாக்கியுள்ளார். [23]

இடப்பாதத்தை நேராகவும் வலப்பாதத்தை திரயச்ரத்திலும் இருத்தியுள்ள கிழக்கர் இடக்கையைக் கடகமாக்கித் தொடைமீது ஊன்றியுள்ளார். [24] வலக்கை மணிக்கட்டுப்பகுதியை உருள்தடியின் மீது தாங்கலாக வைத்துள்ளார். இருவர் தடிகளின்மீதும் பாம்புகள் சுற்றியுள்ளன. இவற்றுள் கிழக்குப் பாம்பு படமெடுத்த நிலையில் காவலரின் வலத்தொடையருகே காட்சிதர, மேற்குப் பாம்போ மேல்நோக்கித் தன் தலைவரைப் பார்க்கிறது. மேற்கிலுள்ளவர் தடியின் கீழ்ப்பகுதியில் சிறிய கத்தி காட்டப்பட்டுள்ளதால் இதை மழுவாகக் கொள்ளலாம்.

இருவருமே கனமான இடைக்கட்டுகளுடன் காட்சிதருகின்றனர். ஆடைமுடிச்சுகளின் பக்கவாட்டுத் தொங்கலும் முன் வளையங்களும் கி.பி. எட்டாம் நூற்றாண்டு மரபையொட்டிக் காட்சி தருகின்றன். இருவர் கழுத்திலும் சரப்பளி. கைகளில் கங்கணங்கள்; பட்டை வளைகள்; செவிகளில் பனையோலைக் குண்டலங்கள்.

கிழக்கர் தோள்களையொட்டி இருபுறமும் சூலஇலைகள்[25] பக்கத்திற்கொன்றாகக் காட்டப்பட்டுள்ளன. நெற்றிக்கண்ணோடு நிற்கும் இவர் சடைமகுடத்தின் வலப்புறத்தே பிறை. வாயிற்காவலர் மகுடத்தில் பிறைவடிவம் இடம்பெறல் அரிதெனலாம். குன்றக்குடி இரண்டாம் குடைவரைக் காவலர் ஒருவர் மகுடத்திலும் இது போல் பிறை உள்ளமை குறிப்பிடத்தக்கது. சூல இலைகள், பிறை, நெற்றிக்கண் இவை மூன்றும் உள்ள இவரை ஆயுதபுருஷராகக் கொள்ளலாம்.

இரண்டு காவலர்களுமே முழங்கால்வரை அமைந்த இடையாடையுடன் உள்ளனர். மேற்கர் புலிமுகப்பதக்கமும் செவ்வகக் கற்களும் பதித்த அரைக்கச்சு அணிந்துள்ளார். கச்சின் முடிச்சுத் தொங்கல்கள் புலியின் வாய்க்கடையிலிருந்து நெகிழுமாறு அமைய, இருவருக்குமே முந்தானை காட்டப்பட்டுள்ளது. அடர்த்தியான சடைக்கற்றைகள் கழுத்தின் இருபுறமும் நெகிழ, நன்றாகப் பொளியப்பட்ட புருவமும் நெற்றிப்பகுதியும் முகத்திற்குத் தனி அழகைத் தருகின்றன.

(தொடரும்)

ஒரு நாட்டு மக்களுக்குப் பன்னாட்டுத் தொடர்பு இருக்குமானால் அந்நாட்டு மக்கள் விசாலப் பார்வை பெறுவர். எல்லைகளைக் கடந்து அவர்களுடைய வாழ்வியல் பண்பு வளரும்; விரிவடையும்; நயத்தக்க நாகரிகத்தில் வளர்வர். ஒரு நாட்டு மக்கள் பன்னாட்டு மக்களுடன் தொடர்பு கொள்ளும்பொழுது, அறிவியல் வளரும். தொழில் நுட்பம் வளரும். கருத்துக்கள் பரிமாற்றத்தால் பல ஆண்டுகள் வளர்ச்சியைச் சில ஆண்டுகளில் எளிதில் பெறமுடியும்.

இனி எதிர்வரும் காலத்தில் உலக நாடுகள் நெருக்கமான நட்புறவை வளர்த்துக்கொண்டு, "ஒருலகம்" காணும் என்னும் நம்பிக்கை வளர்ந்துவருகிறது.

**-அருள்நெறித்தந்தை**

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# கம்பன் என்றொரு மானிடன்

(தமிழாகரர்.பேராசிரியர். **சாமி. தியாகராசன்**)

இன்பத்தை மட்டுமே தரும் தென்றல் தேவன் இராவணனைப் பொறுத்தமட்டில் அவனுக்கு இன்பம் தராமல் துன்பம் தரத்துணிந்து அவனைத் தீண்டுகின்றான். அதாவது இராவணனின் காமத்தீயை அவிக்காமல் அத்தீயை அவனைத் தீண்டுவதின் மூலம் மேலும் மேலும் வளர்க்கின்றான். தன்னை நினைத்தாலே காத தூரம் நின்று சேவிக்கும் தென்றல் தேவன் தன் அருகில் வந்து உடலின் மேல் ஊர்ந்து செல்வது ஒரு பெரிய நச்சரவம் தன் உடலில் ஊர்ந்து செல்வது போல இராவணனுக்குப்படுகின்றது. அதனால்தான் முதல் பாட்டில் தென்றலை அமிழ்து எனச் சொல்லிய கம்பன் அடுத்த பாட்டில் தென்றலைப் பெரிய பாம்பு எனக் குறிப்பிடுகின்றான். பாட்டைப் பார்ப்போம்.

"சாள ரத்தூடு வந்து தவழ்தலும் தரித்தல் தேற்றான்
நீளரத்தங்கள் சிந்தி நெருப்புஉக நோக்கும் நீரான்
வாழ்மனை புகுந்தது ஆண்டுஓர் மாசுணம் வரக்கண்டன்ன
கோள்உறக் கொதித்து விம்மி உழையரைக் கூவிச் சொன்னான்"
(சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம் - 164)

பாம்பு வந்து தொட்டால் ஒத்தத் துன்பத்தைத் தந்த தென்றலை விட்டு வைக்கக்கூடாது எனக்கருதிய இராவணன் ஏவலாளரைக் கூப்பிட்டு "ஊழிக் காலத்தில் கடல் நீரால் மூழ்கிப் போகும் இவ்வுலகினைக் கிணற்றில் ஊறிய நீர் மூழ்கடிப்பது போலத் தேவர்களில் ஒருவனாகிய தென்றல் எனக்குத் துன்பம் தரவல்லானோ" (வல்லவன் ஆகான் என்பது குறிப்பு) எனது கட்டளை இல்லாமல் அவன் எவ்வாறு இங்கே வந்தான். இதனை விசாரிக்க வாயில் காவலரை உடனே கொண்டு வாருங்கள் என்கிறான்.

கட்டளையை ஏற்றக் காவலர்கள் விரைந்து ஓடிச் சென்று வாயில் காவலரை அழைத்து வந்தனர். வந்த காவலரைக் கோபம் கொண்ட சிவந்த கண்களுடன் பார்த்த இராவணன் தென்றல் தேவன் இங்கே வர நன்கு வழி அமைத்துக் கொடுத்தது நீங்கள் தானே என்று கேட்க அதற்கு அவர்கள் "தாங்கள் இவ்வாறு இருக்கும்போது தென்றல் வரலாகாது என்ற தடை உத்தரவு இல்லை" என்றனர். "இவ்வழி இருந்த காலைத் தடை அவற்கு இல்லை" என்பது கம்பன் வாக்கு: இவ்வாக்கில் "இவ்வழி இருந்த காலை" - என்ற தொடர் நமது கவனத்திற்குரியதாகிறது. இத்தொடருக்கான பொருள் யாது? "தாங்கள் இவ்வாறு இருக்கும்

சமயத்தில்" (காலத்தில்) என்பது அத்தொடருக்கான பொருளாகும். "இவ்வாறு இருக்கும் காலத்தில்" என்ற போதே நம் மனத்தில் எவ்வாறு என்ற கேள்வி தோன்றுகின்றது. இராவணன் இங்கே எவ்வாறு இருக்கின்றான்? காதல் அவசத்தால் உள்ளீடற்று உணர்வற்று இருக்கின்றான். உணர்வற்று இருக்கும் இராவணனுக்கு உணர்வு உண்டாக்கத் தென்றல் தேவை. அக்காற்று வந்து மெல்லென வீசினால் அவன் உள்ளத்தில் மகிழ்ச்சி உண்டாகும். அது கருதியே காவலர்கள் அவனுக்குத் தடை விதிக்கவில்லை என்பது ஒன்று. மற்றொன்று இராவணன் மாற்றான் மனைவியை மனச்சிறையில் வைத்திருக்கின்றான். இன்னொருவன் மனைவியை மனச்சிறையில் வைத்து வாழும் இராவணனைப் பாவம் பற்றி உள்ளது. பாவம் பற்றியதால் வலிமை பெருமை அனைத்தும் அவனை விட்டுப் போய்விட்டன. இவ்வாறு இருக்கும் காலத்தில் எதிரி எளிதில் தடையின்றிப் புகுவான் என்பது. "வேண்டியது நினைந்து செய்வான் விண்ணவர் வருவது என்றால் - மாண்டது போலும் கொள்கை யானுடை வன்மை" என்னும் இராவணனது கூற்றால் உறுதிப்படுகின்றது.

இதைப்போன்று இன்னொரு இடம். சீதையை அடைய வேண்டி மாரீசனைத் துணைக்குக் கொள்ள வருகின்றான் இராவணன். வந்தவன் மாமனாகிய மாரீசனிடம் எப்படியாவது நான் சீதையை அடைய வேண்டும். அதற்கான வழிவகைகளை நீ வகுக்க வேண்டும் என்கின்றான். சீதையை எண்ணி எண்ணித் தான்படும் வேதனையை மாமனிடம் சொல்லி வரும் இராவணன் இறுதியில் "தென்றலைப் பகையைச் செய்த சீதையைத் தருதி" எனக் கட்டளையிடுகிறான்.

நினைத்தாலே நெஞ்சு உலைந்து ஒடுங்குவதுடன் என்னை எட்டி நின்று சேவித்துச் சேவகம் செய்யும் தேவர்களில் ஒருவனான தென்றல், இப்போது கிட்டிவந்து தொட்டுப் பார்த்து எனக்குச் சமமான பகையாகிப் போனான். எனக்குப் பயந்து கிடக்கும் தென்றலை இந்தச் சீதை துன்பம் தரும் பகையாக்கிவிட்டாள். ஆதலால் மாமனே! சீதைக்காக இல்லாவிட்டாலும் இந்தத் தென்றலுக்காகவாவது சீதையை நீ தரவேண்டும் என்கின்றான்.

இராவணனை இப்படிச் சொல்லவைத்ததின் மூலம் மாற்றான் மனைவியை விரும்பும் ஒருவன் எப்போதும் பயந்து கிடப்பான் என்னும் வள்ளுவர் வாக்கை உறுதிப்படுத்துவதோடு எப்பேர்ப்பட்டவனாயினும் அவன் அழிவு சர்வ நிச்சயம் என்பதனை உலகுக்கு உணர்த்த கம்பன் விரும்புகின்றான். இந்தத் தன் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ளத் தென்றலை மிக அருமையாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளான். இந்த அருமைப்பாட்டை எண்ணி எண்ணிக் கம்பனை நாம் பாராட்டுவோம்.

(தொடரும்)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# "அம்மானை அழகர்"

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி)

தேருக்குரிய அலங்காரமாகத் தொங்கலும், தோரணமும், கொடியும், விதானமும், கலசமும் இருப்பதுபோல இந்நூலில் சொல்லழகும் தொடரழகும், பொருளழகும், உவமையழகும் ஆங்கங்கே பரிமளிக்கின்றன. பிள்ளையவர்கள் நல்ல அறக்கொடையாளர்; எப்போதும் எதற்கும் கொடுக்கும் நல்லியல்பினராயினும் ஆராயாமல் கொடுப்பவர் அல்லர் என்பதை "திருப்பணிக்கும் சிவப்பணிக்கும்" தெரிந்துரைப்பார் (3) என்ற தொடரில் சுட்டிய "தெரிந்து" என்ற சொல் உணர்த்திக்காட்டுவது அழகாக உள்ளது. நூலின் இறுதிப்பாடலில் (108) "மும்மலக்கட்டறுத்தவரை மூக்கப்பிள்ளையினை அம்மானை பாடினேன்" எனக் கூறுவதில் "அம்மானை" என்ற சொல் பிள்ளையவர்களையும் நூலையும் உணர்த்தும் சிலேடையான சொல்லழகாகும். செய்பூசை தவறாத சித்தர்காண் எனும் தொடரில் (23) சித்தர்காண் எனும் சொல்லுக்கான பொருள், ஆழமானதாகும். பூசையை வெறும் சடங்கு என வெறுக்கும் சித்தர்களைப் பூசையைப் போற்றுபவருக்குப் பொருத்திக் கூறுவது முரணானாலும் இடையறாமல் பூசை செய்யும் சித்தம் (எண்ணம்) உடையவர் என்ற கருத்தில் சித்தர் என்ற சொல் பயிலப்பட்டது என எண்ணும்போது "சித்தம் அழ்கியார் பாடாரோ நம்சிவனை" என்ற மணிவாசகரின் தொடர்ப் பொருள்தான் கற்போர் நெஞ்சைக் கவ்வும் எனலாம்.

விருப்பு வெறுப்பற்றதைக் "கந்தழி" என்று தொல்காப்பியம் கூறும். அரிதான இச்சொல்லாட்சியைக் கவிதையில் "கந்தழியை ஓயாதே கைகுவிப்பார்" (28) என்பதாகக் கவிஞர் எடுத்தாள்வது சிறப்பாக உள்ளது. மேலும் கவிதைக்கு உயிர்போன்றதான உவமை உயர்வுடையதாக இருக்கவேண்டும் என்ற இலக்கண நியதிப்படி கவிஞர் பிள்ளையவர்களை,

*ஊரூரும் பலிதேர்ந்த உமைபாகன் போலேயே*
*ஊரூரும் சென்றுதல உருதொழுவார்* (17)

எனக்கூறுவது புதுமையாகவும் புரட்சியாகவும் உள்ளது.

ஊர்தோறும் பிச்சையெடுக்கும் சிவபெருமானைப் போலப் பிள்ளையவர்கள் ஊர்தோறும் திருத்தலப் பயணம் மேற்கொள்பவர். இதில் சிவன் உவமைப்பொருள், பிள்ளை உவமேயப் பொருள். இதனால் சிவனுக்கு நிகராகப் பிள்ளை கருதப்பட்டாலும் சிவனை உவமைப் பொருளாக ஆக்கிக் கூறியதால், "தனக்குவமை இல்லாதான்" என

வள்ளுவர் கூறிய கடவுள் இலக்கணத்திற்குக் கவிஞர் அரண் சேர்த்தார் என்றே நினைக்கத் தோன்றுகிறது. தனக்கு உவமையில்லாதவன் இன்னொன்றிற்கு உவமையாகமாட்டான் என்பதால்தான் கவிஞர், மிகவும் கவனத்தோடு ஊர்தோறும் செல்லும் பிள்ளைபோல ஊர்தோறும் பலி (பிச்சை)யெடுக்கும் இறைவனைத் தொழுபவர் எனக் கூறாமல் சிவனை உவமைப்பொருளாக்கிக் கூறியதென்பது இறைத்தத்துவத்தையும் வள்ளுவர் கருத்தையும் அரண் செய்யவே எனலாம்.

இவ்வாறாகக் கவித்துவம் நிரம்பிய நூலின் கண்ணேறாக ஒன்றைக் கருத ஈண்டு கூறப்பட்ட உவகை இடந்தருகிறது. உவமையில் சிவனைக் குறிக்கும் சொல் "உமைபாகன்" என்பது. பிச்சைக்குப் போகும் சிவன், உமையம்மையோடு போன குறிப்பாக உள்ளது போலப் பிள்ளையவர்கள் திருத்தலப் பயணத்தின்போது தம் மனைவியோடு சென்று வழிபட்டாரா என்ற குறிப்பு கவிதையில் இல்லை. குறிப்பாக நூலில், "துவராடை புனையாத துறவுளத்தார் (75), இமையளவு சோராத பிள்ளை, (104) விளம்பரமே வேண்டாத வினைவல்லார் (106) என்றெல்லாம் பாராட்டப்பெறும் பிள்ளையவர்களின் பிறந்த ஊர், வாழும் ஊர் என முறையே "ஐயனிவர் பிறந்தவூர் அலங்கநாதபுரம்" என்றும் (98) "வாழ்கின்ற ஊரான வரகனேரி" (99) என்றும் கூறும் குறிப்புகள் உள்ளன.

ஆனால் அன்னாரது குடும்பம் பற்றிய யாதொரு குறிப்பும் யாண்டும் இல்லாததால் இங்ஙனம் கூறாததையே இவ்வம்மானை நூலின் கண்ணேறாகக் கருத இடந்தந்துள்ளது என்பதாம்.

இப்படிப் பல்லாற்றானும் சிறக்கும் கவிதைத் தேரைப் பிள்ளையவர்களின் தொண்டு பற்றிய செய்திகளும் "தடம் தவறிக் கிடக்கின்ற தமிழிசையை வளப்படுத்தக் கடனாற்றும் பணிகளிலே களம் நிற்பதான" துணிச்சலும் (41) ஏகான்ம வாதத்தை எதிர்த்த (89) போர்க்குணமும் திருமுறைத் திட்டத்தைப் புதிதாக உருவாக்க (76) நினைக்கும் குறிக்கோளுமாகிய குதிரைகள் சிறப்பாக இழுத்துச் செல்கின்றன எனலாம்.

பொதுவாக அம்மானையை மூன்று வகையாகப் பாடுவர். கலம்பல நூலுள் அதை ஓர் உறுப்பாகப் பாடுவர். ஒரு பாடலாக அமையும் அதில் சிலேடை நயம் இருக்கும். இதை மதுரைக் கலம்பகம் போன்ற நூலில் காணலாம். அடுத்தது பெண்பால்பிள்ளைத் தமிழில் ஒருபருவமாகப் பாடுவதுண்டு, மூன்றாவதாக, அம்மானை என்ற சொல்லமையப் பாடுவதை மணிவாசகரின் அம்மானை போலவும் கயிலைத் திருமணி திருவம்மானை - 108 என்ற நூல்போலவும்

உள்ளதைக் கருதலாம். இம்மூன்றாவதான வகையில்தான் திருத்தவத்துறை சார்ந்த புலவர் இந்த அம்மானை நூலைப் பாடியுள்ளார்.

இறுதியாக ஒன்றைக் குறிப்பிட வேண்டும். இந்நூலுள் எது விஞ்சியுள்ளது? திருக்குறள் கருத்தா? திருமுறைக் கருத்தா? என்றதொரு பொருளில் பட்டிமன்றம் நிகழ்த்துதற்கேற்ற அளவில் ஒன்றை ஒன்று விஞ்சுமாறு கருத்துகள் மாறிமாறிப் பரிமாறப்பட்டுள்ளன. இப்படிக் கூறியதை ஒருவகையான திருவருட்குறிப்பு எனலாம். பிள்ளையவர்களைத் தமிழகத்தின் ஆதீனங்கள் யாவும் சொந்தங் கொண்டாடினாலும் அவர் குன்றக்குடி - திருவண்ணாமலை ஆதீனத்திற்கே உரிமைப்பட்டவர் என்பதுதான் உயிர்ப்பானதொரு கருத்து. இதனை 79 ஆம் பாடல் உணர்த்தும்.

மேலும், "திருக்குறளே நமது பொதுமறை, திருமுறைகளே நமது மறை" என்ற குறிக்கோளுடைய குன்றக்குடியின் கருத்திற்கியைய இந்நூல் முழுமையிலும் பிள்ளையவர்கள் திருக்குறளாலும் திருமுறைகளாலும் பொருத்தி உணரத்தக்கவராகப் பெரும்புலவர் ப. அரங்கசாமி அவர்களால் பாடப்பட்ட ஒன்றே மேற்படியான உரிமையை உறுதிப்படுத்தும் வகையில் "அம்மானை அழகரை"ப் போற்றிப் பரவுகிறது இக்கட்டுரை என்க.

---

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

*- ஆசிரியர்*

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# அறிவியல் உறவும் - ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

தீப்பெட்டி தொழிற் கூடங்களில் பொட்டாசியம் குளோரைட் என்ற அத்தியாவசிய மூலப்பொருளின் தட்டுப்பாட்டை அடிகளார் அவர்கள் சந்தித்த முறையும், அதற்காக அவர்கள் செக்ரியின் உதவியினால் ஒரு நடுத்தர அளவிலான கூட்டுறவு உற்பத்தி தொழிற்சாலையும் அமைத்த செய்தியையும் முந்தைய கட்டுரையில் பார்த்தோம்.

செக்ரியுடன் இணைந்து வெற்றிகரமாக ஒரு பெரிய தொழிற்சாலை அமைத்தவுடன் அடிகளார் அவர்களின் கனவுகள் இன்னும் பெரிதாகின. செக்ரியினால் கண்டுபிடிக்கப்பட்டுள்ள அனைத்து தொழில் நுட்பங்களையும் நமது மாவட்டத்தில் கடைப்பிடித்து, இதை ஒரு மின் வேதியல் மாவட்டமாகச் செய்ய வேண்டும் என்று விரும்பினார். இதற்கு முன்பாக முனைவர் H.V.K. உடுப்பா இயக்குநராக இருந்தபோது கால்சியம் மாத்திரை மற்றும் இஞ்சக்ஷனுக்கு தேவையான கால்சியம் குளுகோனேட் உற்பத்தி முனைவர் P. சுப்பையா, விஞ்ஞானி அவர்களின் உதவியால் தனியார் துறையில் அரியக்குடியில் ஆரம்பித்திருந்தது. ஆகையினால் இம்மாவட்டத்தின் பொருளாதாரத்தையும் வேலை வாய்ப்பையும் அதிகரிக்க அடிகளார் அவர்கள் எண்ணினார்கள். இயக்குநர்கள் உடுப்பாவும், வாசுவும் உதவ முந்வந்தார்கள்.

பேருந்துகளுக்கும், மகிழ்வுந்து மற்ற வாகனங்களுக்கும் வேண்டிய மின்கலங்களை (பேட்டரி) உற்பத்தி செய்யலாம் என்ற யோசனையை திட்டக்குழு முன்வைத்தது. கூட்டுறவுத் துறையில் அமைப்பதினால் அரசுப் பேருந்துக் கழகங்கள் மின்கலங்களை வாங்குவதற்கு முன்னுரிமை கொடுக்கும். (தமிழக அரசு அக்காலத்தில் கூட்டுறவு சங்கத்தில் தயாரிக்கும் பொருட்களுக்கு 10 விழுக்காடு விலையில் சலுகையும், கொட்டேஷன் கூட்டுறவுத் துறைகளில் வாங்க விலக்கும், கூட்டுறவுத் துறைக்கு முன்னுரிமை கொடுத்ததையும் நினைவு கூரலாம்.

செக்ரியிடத்தில் காரீய - அமில (Lead Acid Battery) மின்கலங்கள் உற்பத்தி செய்யும் தொழில் நுட்பம் தயாராக இருந்தது. அடிகளார்

அவர்களின் வேண்டுதலின் பேரில் முனைவர் உடுப்பா மற்றும் விஞ்ஞானிகளுடன் கலந்து குறைந்த ராயல்டியின் அடிப்படையில் தொழில் நுட்பத்தை வழங்கினார்கள். இத்தொழிற்சாலைக்கு "அண்ணா பேட்டரி கூட்டுறவுச் சங்கம்" என்று பெயரிடப்பட்டு முதற்கட்டமாக மாதம் 300 மின்கலங்கள் உற்பத்தி நிர்ணயிக்கப்பட்டது. 10 நபர்களுக்கு வேலைவாய்ப்பும், 10 பயிற்சியாளர்களுக்கும் வகை வகுக்கப்பட்டது. தரமான மின்கலங்கள் தயாரிக்கப்பட்டு போக்குவரத்துக் கழகங்கள் மற்றும் தனியார் நிறுவனங்களுக்கும் விற்கப்பட்டன.

அறிவொளி இயக்கத்திற்கு சூரிய வெப்பத்தினால் இயங்கும் மின்கலங்களும், காரீய - அமில மின்கலங்களும் தேவைப்பட்டபோது, இந்த தொழிலகம் காரீய - அமில மின்கலங்களை தயாரித்து அளித்தது. திட்டக்குழுவின் படித்த இளைஞர்கள் கிராமங்களுக்குச் சென்று சூரிய ஒளி விளக்குகளை அமைத்து உதவினார்கள். கூட்டுறவுத் துறையில் அதிக முதலீடு செய்ய முடியாததாலும், சந்தையில் ஏற்பட்ட மாற்றங்களினாலும் இந்தத் தொழிலகம் பிற்காலத்தில் தனியார் துறைக்கு மாற்றப்பட்டது.

செக்ரியிலிருந்து மற்றுமொரு பெரிய தொழில் நுட்பத்திற்கு திட்டமிடப்பட்டது. அது கட்டிடத்திற்கு வேண்டிய அலுமினிய உலோக பாகங்கள் (சன்னல்கள், தாழ்ப்பாள், பார்ட்டிஷன் மற்றும் பொய்க் கூரைகள் தயாரிப்பதற்கான அலுமினிய ப்ரேம்கள்) தயாரிக்கும் தொழில் நுட்பம் ஆகும். இப்பொருட்கள் பம்பாய், பெங்களூர் போன்ற நகரங்களில் அதிக அளவு தயார் செய்யப்பட்டன. தமிழகத்தில் இவைகளுக்கு அதிக தேவையிருந்ததால் இதைத் தயாரிக்கும் தொழிலகம் குன்றக்குடிக்கு அருகாமையில் உள்ள கொரட்டி கிராமத்தில் அமைக்க முடிவு செய்யப்பட்டது. அடிகளார் அவர்கள் அதற்குத் தேவையான நிலத்தை வாங்கித் தந்தார்கள். கட்டிடத்திற்கு அடிக்கல்லும் நாட்டப்பட்டது. விஞ்ஞானி ஷெனாய் இத்துறையின் தலைவராகவும், தானே நல்ல வல்லுநராகவும் இருந்ததால் மிக்க ஆர்வத்துடன் செயல்பட்டார். கூட்டுறவுத் துறையை அணுகிச் செயல்பாடுகள் தொடங்கப்படடன. மாநில தொழில்துறை இதில் ஆர்வம் காட்டவில்லை. திட்ட அறிக்கை ஒப்புதலில் கால தாமதம். ஆகையால் இத்திட்டம் நிறைவேறவில்லை.

பெரியார் முந்திரி தொழிற்சாலையில் ப்ரைமர் பெயிண்ட் தயாரிக்கப்பட்டது என்று பார்த்தோம். ப்ரைமர் பெயிண்டுக்கு மேலாக

கொடுக்கக்கூடிய வண்ணம் "எனாமல்" பெயிண்ட் ஆகும். இது செயற்கை பிசின்களைப் பயன்படுத்தி தயாரிக்கப்படுகிறது. எனாமல் பெயிண்ட் தயாரிக்கும் தொழில்நுட்பம் செக்ரியிலிருந்து பெறப்பட்டு, இன்றும் முந்திரி தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டு விற்கப்படுகிறது.

கிராமப்புறங்களில் தொழில்நுட்பங்களைத் தவிர தொழிற்பயிற்சிகளிலும் அறிவியல் கல்வியின் தரத்தை மேம்படுத்தவும் செக்ரி தன்னை ஈடுபடுத்திக்கொண்டது. ஒன்றியங்கள் தோறும் பிறகு மாவட்ட அளவிலும் அறிவியல் கண்காட்சி பள்ளிகளில் அமைத்து அறிவியல் விழிப்புணர்வை மாணவர்களிடையேயும், கிராம மக்களிடையேயும் ஏற்படுத்தியது குறிப்பிடத்தக்கது. தவத்திரு அடிகளார் அவர்களுக்கு இந்நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்வதில் ஆர்வமும், மகிழ்ச்சியும் அதிகம். நிகழ்ச்சிகளுக்கு முன்பாகவே பள்ளிகளுக்குச் சென்று கழிப்பிடம், குடிநீர் வசதி போன்ற அடிப்படை வசதிகளை அமைக்க உதவினார்கள். கிராம பிரமுகர்களையும் அறிவியல் நிகழ்ச்சிகளில் பங்கேற்கச் செய்தார்கள். கண்காட்சியில் பங்கு பெறும் மாணவ, மாணவிகளுக்கு குன்றக்குடி மடத்தில் உணவு தயாரிக்கப்பட்டு லாரியில் எடுத்துச் செல்லப்பட்டு மூன்று வேளைகளும் வழங்க ஏற்பாடு செய்தார்கள்.

மைய அரசின் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்துறை செக்ரியின் மூலமாக தொழில் முனைவோருக்கான பயிற்சிகளை கொடுக்க முன்வந்தது. இத்திட்டத்தின் கீழ் (STED) குன்றக்குடியில் அடிகளார் அவர்கள் ஒரு பணிமனை அமைத்துத் தந்தார்கள். கிராமப்புற இளைஞர்களுக்கு பல்வேறு தொழிற்பயிற்சிகள் கொடுக்கும் வாய்ப்பு கிடைத்தது. செக்ரியின் மூலமாக NRDC என்ற தேசிய ஆராய்ச்சி மற்றும் (தொழில்) மேம்பாட்டுக் கழகம், டெல்லி தன்னுடைய மையம் ஒன்றை குன்றக்குடியில் அமைத்து கிராமப்புறத்திற்கு ஏற்ற சில தொழில் நுட்பங்களை விளக்கிக் காட்டியது.

அகில இந்திய அளவில் குன்றக்குடிக்கு அறிவியல் மற்றும் தொழில் நுட்பத்துறைகளிலிருந்து பல திட்டங்கள் வந்து சேர்ந்தது. இது தவத்திரு அடிகளார் அவர்களின் அறிவியல் பார்வை, சிந்தனை மற்றும் செயல்பாடுகளுக்கு கிடைத்த அங்கீகாரம் ஆகும்.

தொழிற் பயிற்சிகளின் விளைவாக இன்று குன்றக்குடியில் I.T.I. (NCVT) மலர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. குன்றக்குடி மட்டுமல்லாமல் சிவகங்கை மாவட்டம் முழுவதும் இளைஞர்களுக்கும், பொறியியலாளர்களுக்கும் பல்வேறு தொழில்களில் பயிற்சி கொடுக்கும் வாய்ப்பை, மைய அரசின் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன அறக்கட்டளைக்கு ஜன் சிக்ஷான் சன்ஸ்தான் (மக்கள் கல்வி நிலையம்) திட்டத்தின் கீழ் வழங்கியிருக்கிறது.

தவத்திரு அடிகளார் அவர்கள் குன்றக்குடி மாதிரி கிராமத் திட்டம் மாவட்ட அளவில் செயல்பட விரும்பி அதற்கான திட்டங்களையும் ஆரம்பித்தார்கள். ஆனால் செயல்படுத்த அவரை காலம் நம்மிடையே விட்டுவைக்கவில்லை.

எல்லாத் துறைகளிலும் அவர்களுடைய பணிகளைத் தொடர்ந்து இம்மியும் குறையாமல் முழு மூச்சுடன் செயல்பட்டு வரும் 46வது குருமகா சந்நிதானம் அவர்கள் மக்கள் கல்வி நிலையத் திட்டத்தை பெரும் முயற்சி எடுத்து நமது மாவட்டத்திற்கு பெற்றுத் தந்து, அதன் தலைவராக இருந்து அடிகளார் அவர்களின் கனவுகளை நிறைவேற்றி வருவது நம் அனைவருக்கும் எல்லையற்ற மகிழ்ச்சியைத் தருகிறது.

மக்கள் கல்வி நிலையம் சிவகங்கை மாவட்டத்தில் பல மையங்கள் அமைத்து ஆண்டுக்கு 4000 நபர்களுக்கு (படிக்காதவர்கள், ஓரளவு படித்தவர்களையும் சேர்த்து) ஐம்பதிற்கும் மேற்பட்ட தொழில்களில் பயிற்சியும், பயிற்சி பெற்ற நபர்களுக்கு தொழில் துவங்கவும் உதவி புரிகிறது என்றால், நமது அடிகளார் அவர்கள் கொண்டுள்ள ஈடுபாடும் வழிகாட்டுதலும் முன்நிற்கின்றது.

(முற்றும்)

நாம் நம்முடைய மனிதகுல மேம்பாட்டுக்காக ஒரு புதிய சக்தியைத் தோற்றுவிக்க இயலாது, முடியாது. ஆனால், மனிதகுலம் உயர்ந்த இலட்சியங்களின் அடிப்படையில் ஒருமை உணர்வுடன் ஒன்றுபட்டால், கூடித் தொழில் செய்து வாழத் தலைப்பட்டால் ஒரு புதிய சக்தி தோன்றும்! இந்த அற்புதமான மனிதக் கூட்டுறவு சக்தி, படைப்பாற்றலுடையதாக விளங்கும். இந்தியாவின் மேடுபள்ளங்கள் நில அமைப்பில் மட்டுமல்ல, மனிதர்களிடையும் கூட இருக்கிறது. இந்த நிலை மாறி, எல்லாரும் எல்லாம் பெற்று இன்புறு நலன்களுடன் வாழ்ந்திடக் கூட்டுறவு வாழ்க்கையே சிறந்தது!

**– அருள்நெறித்தந்தை**

# "அருளாலய பேச்சு வார்த்தை"

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி -9)

யார்யாரோ ஏதெதற்கோ பேச்சு வார்த்தை
என்கின்ற சிறப்பான ஏற்பாட் டாலே
தீராத தாயுள்ள சிக்க லுக்குத்
தெளிவான தீர்வுகளைப் பெறலாம் என்பார்!
கார்சூழ்ந்த மேகத்தைக் காணாப் பாலை
நிலங்கூடக் கனமழையைக் கண்டா லும்மே
பாருலகில் நடக்கின்ற பேச்சு வார்த்தை
பலன்தருதல் கல்லில்நார் உரித்தல் போலாம்!

சிங்காரக் காஷ்மீர எல்லை யோடே
சிறப்பான சீனத்தின் எல்லைக் கோடும்
பொங்கிவரும் காவிரியால், பொலியும் முல்லைப்
பெரியாற்றின் அணைக்கட்டால் நம்நாட்டோடு
சங்காரம் வளர்க்கின்ற கன்ன டம்போல்
சங்கடம்செய் கேரளத்தின் செயற்பாட் டிற்கும்
தங்காதல் கொண்டேதான் பேச்சு வார்த்தை
தயவாக நடந்ததெல்லாம் தகர்ந்தே போச்சே!

பனிகொட்டும் காஷ்மீர மக்கள் தாமும்
பனியாலே நடுங்காமல் பல்லாண் டாக
மனிதநேயம் இல்லாத மிருகப் பண்பின்
மறுவுருவப் பேர்வழியால் நாளும் நாளும்
கனியழுகிப் போதல்போல் கசந்த வாழ்வால்
கணப்பொழுதும் நிம்மதியை இழந்தா ராகித்
தனிமரமாய் நிற்கின்றார்! அந்தோ அந்தத்
தரிசுநில வாழ்விற்குத் துளிர்ப்பென் றோதான்!

பாக்கிஸ்தான் நாட்டோடு பாரதத்தின்
பாங்குரிமை இருப்பதினால் காஷ்மீர ரத்தின்
ஆக்கமெலாம் சாணேற முழஞ்ச றுக்கும்
அழும்பாகப் பாழ்பட்டுப் போகா வாறு;
ஊக்கமுடன் அங்குள்ளோர் உரிமை யாக
ஒருநாட்டின் தலைமையின்கீழ் வாழு தற்கு
வாக்கெடுப்பை வாய்ப்பாகத் தந்து விட்டால்
வழுக்கலான பேச்சுவார்த்தை தீரு மன்றோ!

அவ்வாறே சீனஎல்லைப் பேச்சு வார்த்தை
அடியோடே மாய்வதற்கு அந்நாள் தொட்டே
இவ்வுலகப் புராணத்தில் கூறும் அந்த
இமயமலை வரலாறு நமக்கே அன்றிச்
செவ்வாடைச் சீனர்க்கும் உண்டா? மற்றும்
செந்தமிழின் அரசரெலாம் கொடியை நாட்டி
வவ்விவந்த இமயமலை வெற்றி தானும்
வழிவழியாய் சீனாவுக் கிலையென் போமே!

முன்னாளில் மூத்தமொழி யாயி யிருந்த
முத்தமிழ்தான் முறையாகப் பிரியும் போது
பின்னாளில் கன்னடமாய் களிதெ லுங்காய்
பிறங்குகவின் மலையாள மொழியாய் மாறி
மன்னுபுகழ் கொண்டாலும் தாயைப் பேணும்
மகத்துவத்தை மனதினிலே கொண்டு விட்டால்
கன்னடத்துக் காவிரியின் பேச்சு வார்த்தைக்
கணப்போதில் மறையக்கா விரிபா யாதோ?

முல்லைப்பெரி யாறாலே முகிழ்த்த எண்ணம்
முறையான மனராசி யாலே, காணும்
தொல்லைகளே இல்லாமல் செயலாம்! ஆனால்
தொடர்ந்திங்கே தேசியக்கண் ணோட்டம் இன்றி
ஒல்லையிலே பேச்சுவார்த்தை தீரா வாறாய்
ஒத்தமனம் இல்லாமல் சொந்த வீட்டில்
கொல்லைப்புற வழியாலே நுழைதல் போலக்
கொடுக்கின்றார் மனுக்களையே நீதி மன்றில்!

தூக்கிலிடும் தண்டனையைக் கூட ஆயுள்
தண்டனையாய் மாற்றிடுவர் மேலோர்! ஆற்றுப்
போக்கினிலே வந்திட்ட பேச்சு வார்த்தை
பொலிவின்றிப் போனதுபோல் நடுவர் மன்றம்
நோக்கியங்கே போவதுடன் நதிநீ ராயம்
நெஞ்சுபடக் கூறுகின்ற நல்ல தீர்ப்பின்
போக்கிற்கும் அடங்காமல் புன்மை செய்யும்
பொல்லாங்கை என்சொல்ல நம்நாட் டில்தான்?

அண்டையுள சிங்களத்தில் பல்லாண் டாக
அடுத்தடுத்து நடந்துவரும் சண்டை ஓயப்
பண்டுமுதல் பாரதமும் நார்வே போன்ற
பலநாடும் முன்வந்து பேச்சு வார்த்தை
அண்டியேசெய் வித்தாலும் அயனும் மாலும்
அடிமுடியைத் தேடியநற் புராணம் போல
மண்டுகிற இனப்போரை மாய்க்க எந்த
மகேசன்தான் வருவாரோ? அறியோ மம்மா!

என்றபடி என்மனதில் எழுந்த தெல்லாம்
எக்காளம் இட்டபடி இருந்த போது
குன்றக்குடி அடிவார அருளா லயத்தின்
குளிர்நிழலில் வந்தொருவர், "பேச்சு வார்த்தை
இன்றுபலன் தரவில்லை என்றா லும்மே
இருக்கின்ற காலந்தான் பதிலைச் சொல்லும்,
நன்றிதனைப் பலவாறாய் உணர லாகும்!
நடந்திட்ட ஒன்றிரண்டைக் கேளும் என்றார்!

இரும்புமனம் படைத்திட்ட பட்டேல் தானும்
இருக்கின்ற சமஸ்தானம் பலவற் றய்யும்
விரும்புகிற பேச்சுவார்த்தை தன்னால், அன்று
விதிப்படியாய் இந்தியத்தோ டிணைத்தார்! மற்றும்
கரும்படியின் சுவையாக வினோபா தாமும்
கனிவான பூதானப் பேச்சால் வெற்றிப்
பெரும்படியாய்க் கொண்டிட்டார்! மண்டைக் காட்டில்
பிணக்கொழித்த நம்வெற்றி அவ்வா றன்றோ?

ஆதலாலே ஆங்காங்கே நடப்ப தான
அத்துமீறல் கண்டுமனம் பொரும வேண்டாம்!
மோதலினால் பயனில்லை! நீதி மன்றை
மொய்ப்பதினால் உண்டுபயன் என்றா லும்மே
சாதல்வரை மனக்கசப்பு கவ்வும், அந்த
சலிப்பான மனஅரிப்பை மாற்ற வேண்டின்
காதல்மனப் பேச்சுவார்த்தை வேண்டும்" என்று
கனவினிலே உரைத்தாரைக் கைதொழு தேனே!

---

# சங்க இலக்கிய ஆய்வு மையம்
RESEARCH CENTRE FOR SANGAM LITERATURE
(since 1995)
"KURINJI" HIG-17, TNHB, THOPPUR, MADURAI - 625 008. Cell : 98421 78721

## தன்னார்வத் தமிழ்ப்பணி
## தமிழுறவு (Thamizhuravu)

செவ்வியல் மொழி என அரசு அறிவித்தமைக்கு, தமிழின் தொன்மை, தொல்காப்பியச் சீர்மை, சங்க இலக்கியச் சால்பு என்பனவே அடிப்படையாகும்.

இந்த அடிப்படைச் சான்றாதாரங்களை ஒருசேர சேகரித்து அதனை நூலாக்கம் செய்து அனைவருக்கும் பயன்படச் செய்தலே முதல் நோக்கமாகத் தமிழுறவு கொண்டுள்ளது.

தமிழறிஞர், தமிழாய்வாளர், தமிழார்வலர் என யாவரும் இத்தன்னார்வத் தமிழ்பணியில், முழுமூச்சுடன் உடனே ஈடுபட அன்புடன் அழைக்கின்றோம். இதனை ஒரு பன்முகப் பணி என்றும் கூறலாம். தாங்கள் அனுப்பும் குறிப்புகள் - நூல் சான்றுகள் - செய்திகள் - புகைப்படங்கள் - ஆவணங்கள் ஒருசேரத் தொகுத்து பதிப்பிக்கப்படும். குறிப்புகளைத் தேடிக் கற்றுத் தெரிந்து அனுப்புபவர் பெயர், அவ்வக் குறிப்புகளில் இடம்பெறும். தாங்கள் அனுப்பவேண்டிய குறிப்புகளின் தலைப்புகள் பின்வருமாறு.

1. தமிழ்த் தொன்மைக் களஞ்சியம்

அகழாய்வு, கல்வெட்டு, செப்பேடு, நாணயம், பயணிகள் குறிப்பு, அறிஞர்கருத்து, மலை, ஊர், இலக்கிய அகச்சான்று என ஆயிரம் குறிப்புகளை ஒருவழித் தொகுத்தல்.

2. தொல்காப்பியம்

தொன்மை, அதன் கட்டமைப்பு, பின்பற்றியுள்ள ஆய்வு நெறிமுறைகள், அதிலுள்ள இலக்கணப் புலங்கள், திணை இலக்கியம், இலக்கியக் கொள்கைகள், கலைச் சொல் நிரல் பதிப்பு வரலாறு, ஆய்வடங்கல், சொல்லடைவு.

3. சங்க இலக்கியச் சால்பு

தனித்தன்மைகள், சிறப்புடைய பாடல்கள், தொடர்கள், சங்க இலக்கியம் பற்றிஹ அறிஞர் கருத்துக்கள், பிறமொழி இலக்கிய ஒப்பீடு, மானுட விழுமியம், மனிதம் என இன்னபிற.

சங்க இலக்கிய ஆய்வு மையத்தின் ஓர் அங்கமாகத் தமிழுறவு (தன்னார்வத் தமிழ்ப்பணி) செயல்படும். தமிழுறவு அமைப்பின் மதியுரைஞர் குழுத் தலைவராகப் பேராசிரியர் தமிழண்ணல் அவர்களும், பதிப்பாசிரியர் குழுத் தலைவராகப் பேராசிரியர் இரா. மோகன் அவர்களும் இருந்து செயல்படுவர்.

இத்தன்னார்வப் பணியினை அரசு தொடங்கும் தமிழ்ப்பணிகளுக்குத் துணையாகவும் ஆதாரமாகவும் செயற்படுமாறு கொண்டு செலுத்தப்பெறும்.

மேலும், முழு விவரம் பெறத் தொடர்பு கொள்ளவும்.

*முனைவர் இரா. ஜெகதீசன்*
"தமிழுறவு"
*தமிழ்த்துறைத் தலைவர்*
*அரசு இசைக்கல்லூரி*
*பசுமலை, மதுரை - 625 004*
*செல்பேசி. 98421 78721*

*தமிழண்ணல்*
"ஏரகம்"
*4-585 சதாசிவநகர்*
*வண்டியூர் முதன்மைச் சாலை*
*மதுரை - 625 020*
*பேசி : 0452 - 2533792*
*செல்பேசி : 94430 64749*

## "ஒரு முரண்"

3.2.07ஆம் நாள் காரைக்குடி கம்பன் மணிமண்டபத்தில் "காரைக்குடி புத்தகக் கண்காட்சி" காலையில் தொடங்கியது. மேடையில் தவத்திரு பொன்னம்பல அடிகள், தொழிலதிபர் "வீகேஎன்" குருதிக் கொடைஞர் முத்துப்பழனியப்பன், சிவகங்கை மாவட்ட ஆட்சியாளர் எம்.ஏ.சித்திக், முனைவர் பேராசிரியர் என்.பழனிச்சாமி முதலிய பெருமக்கள் ஐவரும் அமர்ந்திருந்தனர். மேசையில் இவர் இன்னார் என்று தெரிவிக்கும் வகையில் அவரவர்க்கு நேரே அவரவர்பெயர்கள் எழுதப்பட்டிருந்தன! இது இயற்கையானதுதானே, இதில் என்ன முரண் என்று கேட்கிறீர்களா? பெயர்கள் அனைத்தும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தன! பெயர்களைத் தமிழில் தான் எழுதியிருக்க வேண்டும். பிறமொழிப் பத்திரிகையாளர்கள், வாசகர்கள் பார்வையாளர்கள் வரக்கூடும் என்று கருதியிருந்தால் மேலே தமிழில் எழுதி, அதன் கீழே ஆங்கிலத்திலும் எழுதியிருக்கலாம்!

"-மு.மு-"

# "புகழுக்குரிய தகுதிகளோடு தோன்றுக!"

"திருக்குறளின் 24-ஆம் அத்தியாயம் "புகழ்" என்பது பற்றியும், அங்கே இடம் பெற்றுள்ள "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்னும் வள்ளுவர் வாக்கு பற்றியும் நாம் சற்று ஆழமாகச் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளோம்! அண்ணல் காந்தியடிகள், சுவாமி விவேகானந்தர், பேராசான் ஜீவா, இன்று நம்மோடு வாழ்ந்து கொண்டிருக்கும் அருட்செல்வர் மகாலிங்கம், தொழிலதிபர் ராஜபாளையம் ராமசுப்புராஜா போன்ற பெருமக்கள் எப்படிப் பெரும் புகழ் ஈட்டினார்கள் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்! "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்னும் குறளின் தொடருக்கு உரை எழுதவந்த நமது குருமகாசந்நிதானம் "புகழுக்குரிய தகுதிகளோடு தோன்றுக" என்று ஓர் அருமையான விளக்கம் தந்தார்கள்.

அருட்செல்வர் அவர்களும், மதிப்பிற்குரிய ராம. சுப்புராஜா அவர்களும் மிகப்பெரிய செல்வக் குடும்பத்தில் பிறந்துவிட்டதனாலே "புகழ்" பெற்றுவிடவில்லை. அவர்கள் இருவரும் சிறுவயதில் தொழிற் கூடங்களில் சாதாரணமான பயிற்சியாளர்களைப் போலச் சேர்ந்து பழகி, பயிற்சி பெற்று, சிறிது சிறிதாகத் தங்களைத் தகுதியாக்கி மேலே மேலே வளர்ந்தவர்கள்! சுவாமி விவேகானந்தர் தொண்டு செய்து பணியாற்றிப் புகழ்பெற்றவர்;

அண்ணல் காந்தியடிகளும் அவ்வாறே இளம் வயதிலிருந்தே ஒரு போராட்ட வாழ்க்கைக்குத் தகுதி ஆக்கிக் கொண்டவர். பேராசான் ஜீவாவும் அப்படியே! இவர்கள் அனைவரும் தக்க நேரத்தில் தங்களைத் தகுதிப்படுத்திக் கொண்டு தோன்றிப் புகழ் எய்தினார்கள். இத்தகைய வரலாறுகளை இன்றைய இளைஞர்கள் திருக்குறளோடு ஒப்பிட்டுப் பார்த்து, அந்தத் திசை நோக்கிச் சிந்திக்கவேண்டும்!"

(20.1.2007 ஆம் நாள் நடைபெற்ற 105ஆவது சிந்தனை நந்தவனம் கூட்டத்தில் தவத்திரு பொன்னம்பல அடிகள் ஆற்றிய சிறப்புரையிலிருந்து)

செய்தியாக்கம் : "-மு.மு-"

# காரைக்குடிக் கம்பன் விழாவில் ஜீவா

காரைக்குடி கம்பர் விழா, சீவா சிறப்புரை, மேடை ஏறியதும் கதர்த் துண்டு அணிவிக்கப்படுகிறது. அதை எதிரே உள்ள பேச்சு மேடையில் போட்டு விட்டு கடல்மடை திறந்தது போல் பேசுகிறார். மகுடிக்கு மயங்கும் பாம்பாக மக்கள் ஆர்வமுடன் மதிமயங்கிக் கேட்கின்றனர். மக்கள் மயங்கியதில் வியப்பில்லை. குறிப்பிட்ட நேர வரையறை காட்ட சிவப்பு மின் விளக்கு அறிவிப்புச் செய்வதைக் கம்பனடிப் பொடியாரே மறந்து விட்டார் என்பதுதான் வியப்பு. நேரங்கடந்து நினைவுக்கு வந்தும் பயனில்லை. பேச்சு மேடையில் சீவா அந்தக்கதர்த் துண்டைப்போட்டு விட்டதால் அதற்குள் சிவப்பு விளக்கு மறைந்ததால் விளக்கு எரிவது தெரியவில்லை.

எப்படியோ பேச்சின் ஆவேசத்தால் முகத்தில் அரும்பிவிட்ட வியர்வையைத் துடைக்க அத்துண்டை எடுத்த போதுதான் சிவப்பு விளக்கு எரிவது தெரிந்து பரபரப்புடன் கம்பனடிப் பொடிக்குப் பயந்தும் பேச்சை நிறுத்திக் கொண்டு இருக்கைக்கு வந்த சீவாவைக் கம்பனடிப் பொடியார் கட்டித் தழுவி "உங்கள் பேச்சு என்உள்பட எல்லோரையும் மயக்கிவிட்டது. அதனால் சிவப்பு விளக்கும் காலம் தாழ்த்தித்தான் எரிந்தது என்றால் இதில் வெற்றி கம்பன் தமிழுக்கா? அல்லது சீவாவின் செந்தமிழுக்கா? என்று இந்த மேடையே யறியும்" என்றார். அந்த அளவிற்குச் சீவா கம்பனில் ஆழங்கால்பட்டவர் என்பது அங்கையில் நெல்லியான உண்மை.

சீவா ஒருதமிழ்ப்பூ சிங்கார மாமலையின்
பூவாம் குறிஞ்சிப்பூ பூமியில் - ஆவாரம்
பூவேதான் என்றாலும் பொங்குதமிழ்த் தாமரைப்
பூவாவார் என்றும் பொலிந்து!

- தமிழாகரர். **தெ. முருகசாமி**

மனிதன் பிறப்பின் காரணமாகவும், சுற்றுப்புறச் சூழ்நிலை காரணமாகவும் குற்றம் உடையவன். குற்றம் உடையவனாக இருப்பது பாபமல்ல; தவறல்ல. அதுதான் இயற்கையின் நியதி! ஆனால், குற்றத்தினின்று விடுதலை பெறுதற்குரிய நூல்களைக் கற்கவேண்டும். கற்று உணரவேண்டும். குற்றங்களிலிருந்து விடுதலை பெறவேண்டும்; ஒழுகுதல் வேண்டும்.

**- அருள்நெறித்தந்தை**

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
# பழநி
## பரிமள விலாஸ்
# S. சித்தநாதன்
## ஐவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்
### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தநாதன் சன்ஸ்**
**அடிவாரம், பழநி – 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. ‘மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

# மக்கள் சிந்தனை


சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :
*நிர்வாகி,* **மக்கள் சிந்தனை,** குன்றக்குடி
தொலைபேசி எண். 04577 - 2

ஆசிரியர் : **மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி




## காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்தில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அறக்கட்டளைச் சொற்பொழிவு

காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையில் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களால், தவத்திரு குன்றக்குடி அடிகளார் அறக்கட்டளை நிறுவப்பெற்றுள்ளது. இந்த அறக்கட்டளை மூலம் ஆய்வுச் சொற்பொழிவுகள் 15.2.2007 காலை, மாலை இருவேளையும் சிறப்பாக நடைபெற்றன.

சொற்பொழிவு நிகழ்ச்சிக்குப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. பி. கன்னியப்பன் அவர்கள் தலைமை வகித்தார். தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். மு. பாண்டி அவர்கள் வரவேற்புரை வழங்கினார். தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். பேராசிரியர் முனைவர். இரா. செல்வக்கணபதி அவர்கள் காலையில் "நாவுக்கரசர் வழங்கிய ஞானம்" என்ற பொருளிலும் பிற்பகல் "சேக்கிழார் கண்ட செம்பொருள்" என்ற பொருளிலும் ஆய்வுப் பொழிவாற்றினார். துணைப் பதிவாளர் திரு. காளைராஜன் அவர்கள் நன்றி நவில நிகழ்ச்சி இனிதே நிறைவெய்தியது.

MAKKAL CHINTHANAI - February 2007 Price Rs. 5-00
Date of Publication 20-02-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008



பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166